34960

OL/2017/48-T(NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

48 T

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය
தமிழ் இலக்கிய நயம்
Appreciation of Tamil Literary Texts

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

※ பகுதி **I** இல் **1, 2** ஆகிய **இரு** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **3**ஆம் வினாவுக்கும் பகுதி **III** இல் உள்ள **4, 5, 6, 7** ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கும் (எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு) விடை தருக.

## பகுதி I

**1.** (i) தொடக்கம் (v) வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) “நீரெலாம் அயல் நீங்குமின்; நேர்ந்து, யான்
வீரன் உள்ளம் வினவுவல்”

(அ) இக்கூற்று யாரால் கூறப்பட்டது ?

(ஆ) வீரன் என்று சுட்டப்பெறுபவன் யார் ?

(ii) “கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி”

(அ) இங்கு கனாக் கண்டவர் யார் ?

(ஆ) ‘கைத்தலம் பற்றுதல்’ என்ற தொடர்மூலம் சுட்டப்பெறுவது யாது ?

(iii) “வாழி யவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி”

(அ) இங்கு மகவாகவும் தாயாகவும் உருவகிக்கப்படுவன எவை ?

(ஆ) அவ்வாறு உருவகிக்கப்படுவதன் பொருத்தப்பாடு யாது ?

(iv) “குணகடல் செல்வியும் குடமலை ஏகினாள்”

(அ) குணகடல், குடமலை என்ற சொற்களை விளக்குக.

(ஆ) குணகடல் செல்வி யார் ?

(v) “உதிர்ந்து வீழ்ந்தமலர்
கிளைக்குத் திரும்புகிறது”

(அ) இங்கு ‘உதிர்ந்து வீழ்ந்தமலர்’ என்ற தொடரால் சுட்டப்பெறுவது எது ?

(ஆ) அது, ‘கிளைக்குத் திரும்புகிறது’ என்பதிலுள்ள பொருத்தப்பாடு யாது ?

(4 × 5 = 20 புள்ளிகள்)

**2.** கீழ்க்காணும் பாடற்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே

(i) பதம் கெட்டுவிடாது சுவையாகச் சமைக்க வேண்டும் என்பதில் தலைவி காட்டும் அக்கறையைப் புலப்படுத்தும் செயற்பாடுகள் எவை ?

(ii) அவள் சமைத்த உணவை தலைவன் இரசித்து உண்டமை எதன்மூலம் புலனாகிறது ?

[பக். 2 ஐப் பார்க்க

(iii) தலைவனின் பாராட்டுரையால் தலைவி அடைந்த மகிழ்ச்சியைப் புலப்படுத்தும் தொடர் யாது ?

(iv) இச்செய்யுளிற் கையாளப்பட்டுள்ள உவமைகளை இனங்கண்டு விளக்குக.

(v) பின்வரும் சொற்களின் பொருளைத் தருக.

(அ) கலிங்கம்

(ஆ) கழாஅது

(இ) உமஇ

(ஈ) துழந்து

(உ) அட்ட (5 × 5 = 25 புள்ளிகள்)

## பகுதி II

**3.** கீழ்க்காணும் உரைப்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

உச்சி வெய்யில் உடலை வெப்பமேற்றி முதுகை நனைக்கிறது. மேடு, பள்ளம் என்று சைக்கிள் மிதித்ததில் கால்விரல்களில் ஊமைவலி. கையில் கடிதக்கட்டுடன் வியர்வை நெடியோடு, ஊரை வலம் வருகிறேன் நான். காற்றை யாரோ கடத்திக்கொண்டு போன பிரமையில், மரங்கள் சோகம் சுமக்கின்றன. எதிர்பார்ப்பில் சிறகு முளைத்த மனித ஈக்கள், என்னை நோக்கி விரைகின்றன. கனவிலும் நினைவிலும் கடிதக்காரனை ஆராதிப்பதில் ஆசுவதம் காணும் புது யுகமிது.

"எங்களுக்குக் கடிதம் இருக்கியா" பல தடவைகள், கேட்டு செவி மரத்துப்போன கேள்விதான் இது! என்றாலும் தினமும் வந்து தொலைகிறேன் கடிதங்களோடு. பதிலைக் கம்யூட்டர் அறியத்துடிக்கும் அவசரக் குடுக்கைகள், வெளிநாடு போன பர்த்தாவை நினைத்து உருகி கனவுகள் சுமந்த கண்களால் வினா எழுப்பும் ஒற்றைக் குயில்கள், ஆத்மார்த்த சினேகிதனை வரவேற்கும் உற்சாகத்தோடு நெருக்கமாய் ஒட்டிக் கொள்வோர், உறவுமுறை விளித்து காரியத்தைக் கச்சிதமாய் அறிய விழைவோர்.

இப்படி பல ரகத்தினரை, தினமும் பார்க்கின்றேன். அத்தனை முகங்களிலும் பளிச்சிடும் பாவங்கள் எனக்குப் பரிச்சயமானவை. இந்த அந்நியமற்ற யதார்த்தத்தில் ஒரு மழலையைப் போல், மனதைப் பறிகொடுக்கிறேன். நிழல் படுத்துறங்கும் குறுகலான செம்மண் பாதை. வெள்ளைப் புறாக்கள் துள்ளிக் குதிக்கும் கலவன் பாடசாலை, விழுது பரப்பி அடர்ந்து செறிந்த ஆலமரம், துல்லியம் துலங்கும் இறை இல்லமாம் பள்ளிவாசல், குச்சில் வீடுகள், மாடி வீடுகள், தேநீர்க்கடைகள், குப்பைக் கடதாசிகளை மென்று சுவாரசியமின்றிச் செல்லும் கால்நடைகள், இன்னும் செயற்கை முகம் தரிக்காத கிராமத்து புன்சிரிப்புக்கள்.

(i) தபாற்காரரின் உடல் அலுப்பு எவற்றின் மூலம் புலப்படுத்தப்படுகிறது ?

(ii) கடிதத்தை எதிர்பார்த்திருப்போரின் ஆவல் எவ்வெவ்வாறு வெளிப்படுத்தப்படுகிறது ?

(iii) இங்கு நிலவும் காலநிலை எத்தகையது ? அது எவ்வாறு விவரிக்கப்படுகிறது ?

(iv) கிராமத்தில் உள்ள மனிதர் தவிர வேறு எவ்வெவ் விடயங்கள் வருணிக்கப்படுகின்றன ?

(v) பின்வரும் தொடர்களுள் ஏதேனும் ஒன்றில் நீர்காணும் நயத்தினை விளக்குக.

(அ) எதிர்பார்ப்பில் சிறகு முளைத்த மனித ஈக்கள்

(ஆ) நிழல் படுத்துறங்கும் குறுகலான செம்மண் பாதை

(இ) பர்த்தாவை நினைத்து உருகி, கனவுகள் சுமந்த கண்கள் (5 × 5 = 25 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

## பகுதி III

- எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடை எழுதுக.

**4.** **மென்மையே வாழும்** என்ற பத்தி எழுத்தில் மென்மையின் வலிமையை உணர்த்துவதற்கு ஆசிரியர் கையாண்ட எடுத்துக்காட்டுகளை விவரிக்க.

**5.** **பெருமரமாகிப் போனதொரு வாழ்வு** என்ற கட்டுரையை அடிப்படையாகக் கொண்டு பின்வருவனவற்றை விளக்குக.

(i) சினிமாத் துறையில் பாலுமகேந்திரா காட்டிய தீவிர அக்கறை

(ii) தமிழ்ச் சினிமாத் துறையில் அவரது சாதனைகள்

**6.** திருக்குறள், **நலம் புனைந்து உரைத்தல்** அதிகாரத்தில், தலைவியின்

(i) முக அழகு

(ii) ஏனைய உறுப்புகளின் சிறப்பு

என்பன நயம்பட விவரிக்கப்படுமாற்றைத் தெளிவுறுத்துக.

**7.** **தாய்ப் பசு** எனுங் கதையில்,

(i) மனிதரின் சுயநலம்

(ii) பசுவின் ஜீவகாருண்யம்

என்பன காட்டப்பட்டுள்ளவாற்றை விவரிக்குக. (15 × 2 = 30 புள்ளிகள்)

❊❊❊